ஓம் ஸ்ரீ குருப்யோ நம:

# உத்தமனைக் காட்டும் உடம்பு!

ஜெய்மா பவானி

# ஓட்டைக்கோட்டை

காயமாம் பூவில் மணத்தை நிரப்பி
கானல் நீரில் விட்டான் ஈசன் - ஐயகோ
மணத்தில் மயங்கி பூவைத் தொட்டவன்
மகரந்தத்தில் சிக்கிக் கொண்டானே

தன்னில் தானாய் நின்றானாம்
அதில் லீலை செய்ய விருப்பினானாம்
அதனால் மாய மனம் கொண்டானாம்
அதனால் அனைத்தையும் அசைத்தானாம்

ஒன்பதோட்டை கோட்டை
அது பூதங்காக்கும் மாயக்கோட்டை
அந்த கோட்டையை கட்டக் காரணம்
ஆசை மனதின் சஞ்சலமானதோருருவம்

மாயதோற்றம் மயக்கும் தோற்றம்
ஈசனின் அவதாரத் தோற்றம்,
அந்த ஈசனுள்ளம் மாயையாம்
மாயை நாமம் சக்தியாம்

சக்தியிடம் கோட்டையாம்
ஈசனருளால் ஆண்டதாம்
வந்த நோக்கம் அறியாததினால்
ஆசை மயக்க வைத்ததாம்

சக்தி தன்னை மறக்கவே
ஈசனோர்மை வரவில்லை
கோட்டையாளும் கர்வத்திலே
காலந்தனை கழித்ததாம்

கோட்டைப்பணிக்கழகு சேர்க்க
தோற்றம் பலவும் கொண்டதாம்
தன்னுருவில் தானே மயங்கி
ஆணவத்தைக் கொண்டதாம்

தன்னிலிருந்து வேறாக
மற்றவற்றை கண்டதாம்
மூவாசை சுழலும் வந்து
சக்தியை சுழற்றி அடித்ததாம்

நீரில்லா சாகரத்தில் - நீச்சல்
செய்ய விரும்பியதால், கானல்நீரைக்
கண்டதிலே ஆசையுடன் குதித்ததாம்
அதனால் உண்டானது உடலெனும் காயமாம்

அந்த காயமாற துடித்ததாம்
முழுதும் தன்னை மறந்ததாம்
கோட்டைதனை நம்பியதால்
சிறைக்குள்ளகப் பட்டதாம்

கோட்டைக்கும்பி காக்கவே
பலகருமஞ் செய்ததாம்
பாழ்வினையே சுகமெனவே
ஊறியதிலே திளைத்ததாம்

மூவாசைச் சுழல்கள் கொண்ட
அலைகளாடும் ஆழியாம்
பெருங்கடலில் வீழ்வதுமே
சம்சாரமாகுமாம்

அல்லலும் ஆர்ப்பாட்டமும்
கவலையும் கொண்டாட்டமும்
நிறைபலவும் குறைபலவும்
நல்லதென தீயதென

உண்டெனவும் மறுப்பதுவும்
கொள்ளல் என தள்ளலோடு
பிறப்பிறப்பும் தருமகஞ்சன்
செழுமையும் வறுமையும்

கஷ்டநஷ்டமென அழுது
சுகத்தை நாடி துக்கம் கொள்ளும்
பலவிருமை கொண்டதாம்
பெரும்பிணியாம் சம்சாரமாம்

ஆழியதிலே வீழ்ந்தவர்க்கு
இன்பம் என்றுமில்லையே
அல்ப இன்பம் வேண்டியே
அமைதியை தொலைப்பரே

அங்குமிங்கலைந்தலைந்து
அமைதியினை தேடியே
கருமஞ்செய்து கருமஞ்செய்து
பலபிறவி கழிந்ததே

புண்ணியத்தின் பயனாலே
கிடைத்ததோருபாயமே
ஈசனடி பணிந்திடவே
சக்தி தேடியலைந்ததே

தன்னில்பாதி ஈசனென்ற
சத்தியத்தை மறந்துமே
லிங்கம் பலசெய்து பூசை
வழிபாடு செய்ததே

தன்னாலே ஆவதென
ஒன்றுமில்லை என்றுணர்ந்து
மூவகையாம் மார்க்கந்தன்னில்
மூவுபாயங் காட்டியே

ராப்பகலாய் பூசை செய்தும்
நிம்மதியும் போனதே
லிங்கந்தன்னை சித்தத்திலே
ஆழமாக வைத்ததே

லிங்கந்தன்னில் உறைமீசன்
சரணடைந்த சக்திதன்னை
ஆட்கொள்ள விரும்பியே
குருவடிவம் கொண்டதே

என்னதோரு வேடிக்கை
கணப்பொழுதில் மறந்ததாலே
தன்னை தனக்குணர்த்திடவே
தானே இரங்கி வந்ததே

லீலை செய்ய விரும்பம் கொண்ட
ஈசன் சிருஷ்டி ஈதடா
அவனுருவே சகமுழுதும்
ஆடும் ஆட்டம் பாரடா

ஈசன் விரும்பி ஆடும் ஆட்டம்
அவன் நடத்தும் நாடகம்
மாய வேடம் பலபூண்டு
அவன் நடிக்கும் நாடகம்

ஈசனே ஆக்கி காத்து
ஈசனே மறைத்தொடுக்கி
எங்குமீசன் எதிலுமீசன்
என்பதூஉம் ஈசனே

ஈசனே இரங்கிவந்து
ஈசனென்று ஈசனுக்கே
ஈசன் கூற வருவதே
குரு சிஷ்ய நாடகம்

மறப்பதுபோல் மறக்க செய்தும்
நினைப்பதுபோல் நினைக்கச் செய்தும்
ஈசன் மாற்றி ஆடும்ஆட்டம்
வேடிக்கை அல்லவோ

## இருப்பதெல்லாம் ஈசனே!

கற்றுவைத்த அறிவினாலே
சோதிக்க ஆரம்பித்தால்
நானிலத்தில் கரையேற்ற
யாருமில்லை இல்லையே

சித்தம்போலே குருவும் தோற்றம்
கொண்டுதான் வருவரே
மனவிருப்பம் தீர்க்கவே
உபாயங்களும் சொல்வரே

சகத்திலிறைமை கொண்டவரே
குருவடிவை காண்பரே
அவரிடத்தில் சரண்புகுந்து
பிறவிப்பிணியை தீர்ப்பரே

சக்தியினை ஆட்கொள்ள
ஈசனுபதேசம் செய்ய
சந்தேகம் ஏதுமின்றியே
சக்தியதிலே கரைந்திட்டாள்

ஈசன்பாதி நீதானே
ஈசனுள்ளம் நீதானே
உனையியக்கும் ஈசன்
உன்னில் ஆத்மனென உணர்வாயே

அண்டபிண்டம் வேறில்லை
உன்னிலீசன் ஈசனில்நீ
தோற்றத்துக்கே நிலையில்லை
அமுதநிலை ஆத்மனேநீ

ஈசனுள்ளம் மாயஞ்செய்யும்
ஈசனே மாயக்காரன்
மறைக்குமாயை தோற்றங்காணும்
உள்ளது போல் மயக்கிடும்

ரத்தமஜ்ஜை மலஜலமும்
பிணியும் மூப்பும் கொண்டதே
கோட்டையொரு மாயமே
நிலையில்லாது வீழுமே

தூலத்துக்கு சூக்குமம்
அதற்கு காரணம் என
பஞ்சகோச தோற்றமது
பூதங்காக்கும் தோற்றம்

அனைத்துமியங்க ஈசனே
காரணமாம் காரணத்தில்
ஒடுங்குதலே ஐக்கியமாம்
ஈசனோடு கலப்பதாம்

உன்னையறிதல் முக்தியாம்
அமுதநிலையை அளிக்குமாம்
இதையறிதல் ஞானமார்க்கம்
என்றுரைப்பேன் கேளடி

பூசைகளும் உனக்குதானே
புண்ணியத்தை தந்திடுமே
பிறவிபல தந்திடுமே
பதவிகளும் தந்திடுமே

அத்தனையும் ஒதுக்கிவிட்டு
உன்னிருப்பை தேடு
அறிவாலே உன்னிருப்பை
அறிந்து ஒன்றிரு

முக்குணங்களை கொண்டே
உள்ளும் புறமும் பூதமாள
பூதந்தன்னை இயக்குவது
ஈசனென்றுணர்வாயே

சக்தி என்பதை மறந்து
அகங்கார மமகாரங் கொண்ட
நானெனதென்றெண்ணமே
துன்பத்திற்கு காரணமே

பழக்கவழக்கம் காட்டியதால்
நினைவுகளை கொண்டதாம்
பாழும் எண்ணம் தானங்கே
தோற்றமெடுக்க வைத்ததாம்

மனிதனுலகம் இறைவனென
எண்ணுமனமே கண்டதே
காலங்கொண்ட கோலமதிலே
நாட்டியந்தானாடியதே

உலகின் தோற்றம் முழுவதுமே
காமினியும் காஞ்சனமும்
அத்தனையும் மாயத்தோற்றம்
உள்ளதுபோல் கவருமே

மனதை பழக்கிவைத்ததாலே
கவர்ச்சியில் பறிபோனதே
புதைகுழியிதில் வீழ்ந்ததாலே
எண்ணம் நாசமானதே

எண்ணந்தன்னை முறைசெயவே
சாத்திரங்கள் பலவுண்டு
ஒருமனதாய் கற்று கொண்டு
சந்தேகந்தனை தீர்த்திடு

சாத்திரத்தை கற்றபின்னும்
கற்றவற்றை எண்ணிடு
ஊஞ்சலாட்டத்தை நிறுத்தி
எண்ணியதிலே நின்றிடு

மனவடக்கம் செய்திடாமல்
ஞானமடைந்து பயனில்லை
வாழ்ந்து காட்டு கற்றபடி
எண்ணி மட்டும் பயனில்லை

மனதையடக்கும் மார்க்கம் யாண்டும்
விழிப்புநிலையிலிருப்பதே
எண்ணந்தோன்றுங் கணத்திலே
விசாரங்கொண்டு செயிப்பதே

விசாரமென்னும் சாதனம்
ஞானமார்க்க சாதனம்
விவேகந்தருஞ் சாதனம்
வைராக்கிய சாதனம்

சாதனத்தை பெற்றுவிட்டால்
எந்த நாளும் இன்பமே
ஈசனே நீ என்றுணர்ந்து
உன்னை நீயும் பெறுவையே

சத்தாமதை உணர்த்தவே
உவமை பொய்த்துப் போகுமே
சத்தை உணர்த்தும் சித்தினிலே
சித்தாகி நிற்கவே

சித்தினிலே நிலை கொண்டால்
சிதம்பரத்தை காணலாம்
சச்சிதானந்தத்தின்
சக்தியதை உணரலாம்

கோட்டை கிடைத்த வாய்ப்பினாலே
சக்கரமும் நிற்குமே
கோட்டையது ஓர்வரமே
ஈசன் தரும் வாய்ப்பதுவே

ஆனந்தத்தில் தோற்றம்வந்து
ஆனந்தத்தில் நின்றதே
ஆனந்த மயமாகி பின்னே
ஆனந்தத்தில் மறைந்ததே

அன்பினாலே சகமனைத்தும்
நீயென உணர்ந்திட்டால்
அன்பின் வடிவம் ஈசனென்பாய்
அன்பை பொழியச் செய்குவாய்

அர்த்தநாரித்தத்துவமும்
உனக்குரைத்தேன் பாக்கியமே
குருவடிவும் ஈசனென்று
அத்தனையும் கடந்திடு

ஈசனோடு கலப்பதே
நிலையான பேறாகும்
உன்னில் உன்னை நிறுத்திடு
அறிவாய் நீ ஒளிர்ந்திடு

குருவடிவும் கரைந்துவிட
சக்தி தன்னில் தானாய் நின்றாள்
அதில் ஆனந்தம் கண்டாள் - அந்த
ஈசனுள் இரண்டறக் கலந்தாள்

*****

## அனைத்தும் நீயே!

எப்பொருளின் தன்மையெதுவோ அதுவும் நீயே!
எப்பொருளின் குணமெதுவோ அதுவும் நீயே!
எப்பொருளின் பண்பெதுவோ அதுவும் நீயே!
எப்பொருளின் ஓசையெதுவோ அதுவும் நீயே!
எப்பொருளின் செயலெதுவோ அதுவும் நீயே!

நீயே அனைத்தையுமா யிருந்ததருள் செய்ய
யான் செய்வதென்று ஏதுமறியேன் ஆதிமூலமே!

மனமென்பதூஉம் நீயே!
அதன்எண்ணமென்பதூஉம் நீயே!
அதன் பொருளென்பதூஉம் நீயே!
அதன் காரணமாவதூஉம் நீயே!
அதன் காரியமாவதூஉம் நீயே!

நீயே அனைத்தையுமா யிருந்ததருள் செய்ய
யான் செய்வதென்று ஏதுமறியேன் ஆதிமூலமே!

அசைக்கவைத்தாய் அசைகிறேன்
இசைக்கவைத்தாய் இசைகிறேன்
ஆடவைத்தாய் ஆடுகிறேன்
பாடவைத்தாய் பாடுகிறேன்
செய்யப்பணிக்கிறாய் செய்கிறேன்

நீயே அனைத்தையுமா யிருந்ததருள் செய்ய
யான் செய்வதென்று ஏதுமறியேன் ஆதிமூலமே!

எண்ணுகிறாய் எண்ணியதை நடத்துகிறாய் நீயே!
சிரித்தழுது ஏற்கிறாய் ஏற்றதை வெறுக்கிறாய் நீயே!
விருப்பும் வெறுப்பும் இல்லா வெட்டவெளியாய் நீயே!
எல்லாவற்றையும் ஏற்றிவைத்துக் கொண்டாய் நீயே!
ஆக, அத்தனைக்கும் ஆதாரமாக இருக்கிறாய் நீயே!

நீயே அனைத்தையுமா யிருந்ததருள் செய்ய
யான் செய்வதென்று ஏதுமறியேன் ஆதிமூலமே!

நீயே மயக்கும் தோற்றமானாய்
நீயே காக்கும் காவல்காரனு மானாய்
நீயே காத்ததை மறைத்தழித் தருளு மானாய்
நீயே யாவுமாயிருந் தனைத்தையும் அருள்செய்ய
உன்னையன்றி பிறிதொன்றை காணேன்

நான் பிறவேன் இனி பிறவேன் ஒருபோதும் பிறவேன்
பிறந்தால் பிறப்பதூஉம் நீயேயானபின் ஏதுமறியேன்
ஆதிமூலமே.

*****

## உணர்வே நீ!

சாத்திரங் கற்றலின் பயனெதுவாகில் மூலமறிந்ததனில் நிற்றல்

முற்றுணர்ந்த மூத்தோரை நாடி வாழும் வகையறி

மூத்தோரை பணிந்தவர் வழிநடத்தல் வாழ்வுய்ய வழி

பரமாணுவி னற்புதபஞ்சமா பூதந்தன் நிலைமாற தோன்றும் பிறப்பு

பொறியுமதஞ் செயலும் தானே காரணமாவதோர் பந்தவலைக்கே

காமமகல மர்த்த மூன்றும் மானிடப் பிறவி பயனுறவே

விந்தோர் காரணமே உடம்பொடுடம் பினைத்தடக்கம்

அணுவேதானே தோன்றி தானேயாவுமாகி உள்ளும் புறத்தும் விரியுமே

ஐந்தொழிலாற்றும் பஞ்சமூர்த்தியாவது மனதென்றறிவாய்

உணர்வால் பெற்ற உடம்பாகையால் உணர்வெல்லாம் கொண்டதே உடம்பென அறிக

உணர்வாவது சூட்சுமமாகையால் மெய்யுணர்வால் மெய்ப்பொருளை யறி

அணுவா யறியாதிருள் படருத்தமனே ஜீவனெனகாண்

உடம்பின் பயனாவ தறிவால் தன்னை அறிவதே

பிறப்பின் பயனாவ தெல்லாம் மும்மலமறுத் தறவழியில் நிற்பதே

மாசற்ற வமைதி மனது பெறுங்கால் உத்தமனை காட்டு முடம்பே

அகங்கார நிலசித்த நீரும்புத்தி நெருப்பாமன வாய்வெல்லாம் கொண்ட சூட்சுமத்தா லியங்கு முடம்பே

சூட்சுமமெல்லா மியக்குமாதாரா மாபூதம் பரமாணுவே

மனதியல்பே பொறிகளை கொண்டாசையால் புறப்பற்று வைப்பதே

எண்ணந்தோன்றுங் காலங்கே மனமிருக்கறிவாய்

எண்ணமோர் வாசனையாமது சித்தப்பதிவென உணர்

ஆதாரமாயிருந் தெல்லா மறிவது மனதாகையால் கடமையாவது சித்த சுத்தியே

சூட்சும மியங்க மெய்ப்பொருளென் றுணர்பவன் உத்தமனே

தவஞ்செய்து மனவடக்கங் கொண்டாலு மெய்யுணர்வு ஓர்பிறப்பில் வாராது காண்

உடலும தைச்சார்ந் தெல்லா மோர்நாள் மறையுங்
காலொன்று வந்தே தீரும்

தவத்தின் பயனாவது பிறவாமையெனும் மெய்யுணர்வே
ஆராய்ந்தக்கால்

முக்திக்கான முதல்படி பக்தியும் மூத்தோர் நல்லுறவுமே
யதனால் ஈசனே யாவுமாய் காண்

மும்மல மொழித்தமைதி தன்னில் மெய்ஞ்ஞானந்
தோன்று மீசனருளே

உத்தமனே யார்க்கும் ஆதிமுதலா மெனசித்தமறிவ
தவனருளே

நியமயம மென்பது தன்னை ஒழுக்கில் நிறுத்துவதே

குணமனமெல்லாஞ் சூட்சுமமதனை சூட்சுமமே யறியும்

ஒன்றேபல குணத்தோற்றமா மதற்கொன்றே
பொதுக்காரண மெனக்காண்

எவ்வுயிர்க்கு மழியாப்பொரு ளென்றுண்டது
மெய்ப்பொருளே யதுவே ஈசனென உணர்

தன்னில் தன்னைக் காணாதா ரந்தோபாவம் ஈசனை
யறியார்

பாலில் வியாபிக்குந் நெய்யென ஈசனே முதனூலுமதன்
பொருளாம் உணர்

பூவின் மணமென ஈசனை யனைத்திலு மறிவாரே
அனைத்துமே லீலையென ரசிப்பர்

வித்தின் முளையென ஒருமித்துணர்வோடு
மனம்பொருந்த விரிந்தொடுக்கலை அறியும்

ஆசையோடொத்த மனமே சம்சாரசுழற்சிக்கோர்
காரணமாம்

பிறப்பறுக்க வேண்டின் சித்தமலமகன்ற மனவடக்கம்
பெறு

மனமிறக்கக் கற்றாரே தன்னைக் காணும்பேறடைவர்

எண்ணந்தோன்றா நிலையில் இருமையகங் காரமொழிய
விளங்கு மீசன் லீலையே

மனதோடியையும் சித்தபுத்தி யகங்காரத்தால்
முக்தியென்பதில்லை

வாக்குமயக்கு மொழியொடு கற்றறிவிலும் முக்தியில்லை
யென்றுணர்

அணுவாயறிந்தவன் உருவைமறந் துணர்வில் நிற்பான்

அந்நிலையே அருவமாம் உணர்வால் உணரப்பெறின்

நாமரூபமொன்றே மனமறியுமாதலால் உணர்வா
லனைத்தையும் தானென உணர்

தியானதாரண தவமெல்லா நாமரூபமகன்று ணர்வில் நிலைபெறவே

எல்லையிலாதானை தன்னுள்ளுந் தானேயனைத்துமா யறிந்தவனன்பி லூறுகிறான்

தன்னையறியும் அறிவை பெற்றார்க் குய்யும் வீடு

சலனமின்றி சாட்சியாய்தன்னை யறிந்தேதானாய் நிற்க கர்மம் யாவுமழியும்

தோன்றுவதை விசாரத்தாலறுக்க அகவொளி தானாயொளிரும்

தெளிந்தக விளக்கை காணயதுவே பரவெளிவீடாம்

யோனிபலவா விரிந்துபரந் தெங்குமுள்ள ஈசனே தானெனும்நிலை

எங்குமெதிலும் மெய்ப்பொரு ளீசனெனகாண தன்னில்தன் நிலை யொடுங்கும்

யாவுமீசனென்றே சும்மாவிருந் திருசொல்லற உணர்வா லொடுங்கதுவே அமிர்தநிலையாம்

பேசாநிலையதில் உணர்விலொடுங்க பிண்டத்துள்ளண்டம் தெளிவாய் விளங்கும்

---

1. நிர்குண பரப்ரம்ம சொரூபம்
அதுவே அனைத்திற்கும் மூலாதாரம்

அறிவால் தனையறியும் முக்திநிலை உணர
தானாகி தன்னில் தான் நிலைபெறுமே

அறிவினால் அனைத்திலும் மூலத்தை அறியவே
அன்பெனும் பேரலை பரவிடுமே

ஜெய ஜெய என்றே வாழ்த்தொலி முழங்கிட
கர்மமும் அவனிடம் பணிந்திடுமே

2. ப்ரம்மத்தை அறிவாயடி எதிலும்
ப்ரம்மத்தை அறிவாயடி எங்கும்
எல்லாம் ப்ரம்ம மயமே!

இன்பம் என்பதேது துன்பம் என்பதேது
சுகம் என்பதேது துக்கம் என்பதேது
எல்லாம் ப்ரம்ம மயமே!

கனி என்பதேது காய் என்பதேது
விருப்பென்பதேது வெறுப்பென்பதேது
எல்லாம் ப்ரம்ம மயமே!

அழகுள்ளது எது அழகற்றது எது
பண்புள்ளது எது பண்பற்றது எது
எல்லாம் ப்ரம்ம மயமே!

பகல் என்பதேது இரவென்பதேது
நிலையானதேது நிலையற்றதேது
எல்லாம் ப்ரம்ம மயமே!

உயிருள்ளதேது உயிரற்றதேது
அசைவுள்ளதேது அசைவற்றதேது
எல்லாம் ப்ரம்ம மயமே!

பொருளுள்ளதேது பொருளற்றதேது
பேசும் நிலையெது பேசா நிலையெது
எல்லாம் ப்ரம்ம மயமே!

நல்லவை எது தீயவை எது
உள்ளது எது இல்லாததுமெது
எல்லாம் ப்ரம்ம மயமே!

குறையுள்ளது எது நிறையுள்ளது எது
குணமுள்ளது எது குணமற்றது எது
எல்லாம் ப்ரம்ம மயமே!

சுத்தமென்பதேது அசுத்த மென்பதேது
இருளென்பதேது ஒளி என்பதேது
எல்லாம் ப்ரம்ம மயமே!

ஆண் என்பதேது பெண் என்பதேது
இதுவென்பதேது அது என்பதேது
எல்லாம் ப்ரம்ம மயமே!

அறிவால் உணர்ந்தவன் ஊமையாகிறான்
அமைதியில் லயமாகி ஆழ்ந்தே போகிறான்
பேரானந்த தேனை பருகுகிறான் அங்கே
பேரானந்த தேனை பருகுகிறான்

குணாதீத நிலை என்பது இதுவே
அமைதியில் ஆனந்தம் பெறும் நிலை இதுவே
அன்பின் பரவச தியான நிலை இதுவே
அண்டசராசரத்தை தன்னில் காணும் நிலை இதுவே

சச்சிதானந்த ரூபமே இவனே
சச்சிதானந்த ரூபமே எங்கும்
எல்லாம் ப்ரம்ம மயமே!

3. ப்ரம்மத்தை அறிவாயடி ஞானப்பெண்ணே
ப்ரம்மத்தில் உறைவாயடி

காலம் காலனை அழைத்துவரு முன்னே
உன்னை யாரென்றே கண்டுபிடி (ப்ரம்மத்தை)

மூலமென் றொன்றிருக்க வேறெதையோ பற்றி
நானென்ற கர்வங்கொண் டாடாதடி (ப்ரம்மத்தை)

பலவித தேகங்கொண்டே பலதை யனுபவித்தும்
தேகம் மீதாசை இன்னும் போகாததேனடி
(ப்ரம்மத்தை)

பிறவிச் சக்கரத்தில் சுழன்று கொண்டே இருக்க
உனக்கு சலிப்பேதும் வாராத தேனடி
(ப்ரம்மத்தை)

பலவாண்டாய் பலபிறவி தனிலமுதது
போதாதோ
மேலும் பிறக்க ஆசை கொள்ளாதடி
(ப்ரம்மத்தை)

நிலையில்லாத வாழ்வை நிஜமென்றது போதுமே
மேலும் நம்பியே மோசம் போகாதடி
(ப்ரம்மத்தை)

மூவாசையி லுழன்று அழன்றது போதாதோ
மேலு முனக்காசைக ளேதுக்ககடி (ப்ரம்மத்தை)

எண்ணங்களே எல்லா சுகதுக்க காரணமாம்
எண்ணமெழும் போதே விசாரித்தறி
(ப்ரம்மத்தை)

எண்ணமுதிக்கும் போதே மனதங்கே எழும்புமே
விவேகங் கொண்டேயதை பிடுங்கியெறி
(ப்ரம்மத்தை)

எண்ணமில்லா மனதே தூயநிலை காணுமே
புறப்பற்றது விட்டதினால் மூலத்தையறியுமடி
(ப்ரம்மத்தை)

ப்ரம்மமே சத்தியமே மற்றெல்லாம் வெறுந்
தோற்றமே
மாயையில் மயங்கியே வீழாதடி (ப்ரம்மத்தை)

மூலத்தையறிந்தே மூலத்தில் ஒடுங்கிடவே
அன்பே தன்னொளியா யதுஒளிருமடி
(ப்ரம்மத்தை)

நீதானே பெண்ணே ஆனந்த ரூபம்
நீதானே அன்பின் வடிவென்றறி (ப்ரம்மத்தை)

எங்குமானந்தம் எல்லாமானந்தம்
பரமசுகா னந்தத்தை பருகிடடி (ப்ரம்மத்தை)

4. மனதினை அறிவாய் மாய மனதினை அறிவாய்
மானும் மயிலும் ஓர் கட்டிலகப்படும்
மனதோ கட்டிலடங்காது ஆட்டம் ஆடிடும்
புதிது புதிதாக தானே கோட்டை கட்டிடும்
பாழும் எண்ணத்தாலே தானே வீழ்ந்து
மடிந்திடும்

காணும் காட்சிகளெல்லாம் மனதை மயக்குதே!
அனுபவிக்க ஏக்கம்கொண்டு மனது அலையுதே!
போதுமென்று கூற மனது ஓட்டை பானை
போன்றதே!
அதை நிரப்ப முயற்சி செய்து செய்து பிறவியும்
பல போகுதே!

நிலையில்லாத வாழ்வு தன்னை நிஜமெனவே
நம்பிடுதே!
அலைகளாடும் ஆழிபோலே ஆசையாலே
விம்மிடுதே!

நிம்மதியை சேர்க்கும் வழியை அதுவே தேடி
அலையுதே!
குரங்கு போலே ஏதோவொன்றை பற்றிக்
கொண்டு திரியுதே!

புறத்தில் காணும் விஷய சுகத்தை பற்றிக்
கொள்ள விரும்புதே!
நாம ரூபம் கொண்ட உலகை படைத்து மனமும்
மகிழுதே!
மூன்று அவஸ்தை தன்னில் மூழ்கி அனுதினமும்
அலையுதே!
பிறப்பின் பயனையறியாமல் பிறவிகளாய் பல
தேகத்தை வீணாய் எடுக்கிறதே!

உளதை இலதாக காட்டி இலதை உளதாக
காட்டிடுதே!
மனமதின் மாய லீலை தன்னில் மகிழ்ச்சி
கொண்டாடுதே!
மதியை இழந்ததாலே மனமயக்கத்தில்
தள்ளாடுதே!
மகத்தான அறிவை அறிய முடியாமல்
அல்லல்பட்டு ஜீவனாச்சுதே!

மனதங்கே படைத்ததாலே தோற்றம் இங்கே
வந்ததே!
தோற்றமதை சிந்திக்க, சிந்திக்க காத்தல்
என்பதும் வந்ததே!
அத்தனையும் காத்து, காத்து ஆனந்தம் அழிந்து
போனதே!
அத்தனையும் முத்தொழிலாய் செய்வதெல்லாம்
இந்த மனதின் மாயத் தோற்றமதே!

சித்தந்தன்னில் ஆதி முதல் பலப்
பதிவுகளுண்டு!
அதை செயல்படுத்தி மகிழ்வது தான் மனதின்
இயல்பாய் கொண்டு!
அதன் ஏவல் பணிகளுக்கு ஏற்ற பொறிகள்
ஐந்துண்டு!
ஐம்பொறிகளாலே விஷய சுகத்தை மனம்
நாடுவதுண்டு!

வழக்கமாக புறத்திலோடும் ஓட்டந்தன்னை -
தொடர்
பழக்கத்தாலே உள்முகமாய் திருப்பி காட்டிட -
தொடர்
பயிற்சியாலே மனதும் அங்கே ஒருநிலைப்பட -
தொடர்
முயற்சியாலே காரணத்தில் சித்தம் ஒடுங்கிட

சித்தத்தின் தெளிவினாலே சலனம் மறைந்திட
மனவடக்கம் ஒன்றேயாகும் பரகதி பெற
பாலுறைய பாலில் சேர்க்கும் மோரது போல
தனிமையோர் உபாயமே தன்னை விசாரம்
செய்ய
நேதி விவேகத்தாலே தோன்றுமெண்ணம்
நசியுதே!

விவேகத்தின் திடமது தானே வைராக்கியம்
பெற்றிடுதே!
ஞானத்தில் வைராக்கியம் தானே முக்தி
நிலைக்கு உதவுதே!
தன்னில் தானாய் இருப்பதுதானே சமாதி
என்றாகுதே!

விவேகந் தன்னை அறிய சாதனைகள்
நான்குண்டு!
சாதன சதுஷ்டயம் என்ற பேரதற்குண்டு!
சித்த மலங்களகற்றிடவே இந்த சாதனைகள்
உதவுவதுண்டு!
எண்ணமில்லா நிலையதில் மனதும்
அடங்குவதுண்டு!

பஞ்சகோசமதிலிருந்து வேறானதாக நின்ற
மூலமதை ஆத்மனென மனம் உணருதே!
அந்நிலையில் அனைத்திலும் ஊடுருவி
ஆள்கின்ற ஆன்மாவில் மனம் ஒன்றிடுதே!

முக்தி வேண்டி அங்கும், இங்கும் ஓட
வேண்டியத் தேவையில்லை!
அறிவை உணரும் ஓர் கணமே அந்த மனதில்
இனிக் கவலையில்லை!
தன்னை அறிவதை விட்டால் வேறு வழியும்
இங்கில்லை
இப்பிறப்பை வீணாக கழித்து விட்டால்
கடைத்தேற இனி கதியும் இல்லை

அறிவால் தன்னை அறிய காரண மூலம்
விளங்கும்!
தூங்காமல் தூங்கும் சுகத்தில் இந்த ப்ரபஞ்சமும்
விளங்கும்!
பிண்டத்துள்ளண்டம் காண படைப்பின் ரகசியம்
விளங்கும்!
அந்த அமைதியிலே மனதில் ஆனந்தம்
விளங்கும்!

5. உலகோர் நெறியாய் வாழ நல் உபதேசங்கள்
தந்த குருவாய் வந்த அற்புதமே!

ஆனந்த நிலையே அமுதே உனை பெற்றேன்
பெரும் பாக்கியமே!

அறிவா யெனி லமர்ந்த அன்பே வளர்
குஞ்சிதமே!

இருப்பாய் இருக்கும் விளக்கே! மன இருளை
விலக்கும் வெளிச்சமே!

உன் ஒளிச்சுடரால் பெரும் பிரகாசத்தை அருளி
பெரு வாழ்வை காட்டிக் கொடுத்த பெருமிதமே!

அல்லும் பகலும் வினைதனில் மூழ்கி அறியா
இருளில் ஆழ்ந்திருக்கும் மனதை, அறிவு
வெளிச்சத்தால் வெளிக்கொணர்ந்த பிரகாசமே!

பரகதியைப் பெற்றிடும் வகை செய்தெனை
ஆட்கொண்ட பரம்பொருள் பரவசமே!

என்னில் நீ உன்னில் நானெனு முயர் நிலையை
அருளி உன்னைப் போலெனை யாக்கிய உத்தம
தத்துவமே!

அணுவி லணுவா யொடுங்கி அணுவி னணுவாய்
விரிந்து அனைத்திற்கு மாதார ஆதி மூலமே!

மனதே முத்தொழிலாற்றிடும் மூலக்கனலென்
றருளி

வித்தே யது தானென் றுணர்த்திய வித்தகமே!
வித்தின் விளைவே யது முடியா முதலென்
றருளி
படைப்பின் பெருமை யுணர்த்திய பராபரமே!

சித்தே குணத்தாலாகி குணமே குணத்தை காண
முக்குணத்தின் பண்புரைத்த குணாதீதமே!

சித்தின் விளைவே செயலை செய்யத் தூண்டும்
மனதின் மாண்பென விளக்கிய மறைமுகமே!

சித்தே நீயே விளைந்தாய் மகிழ்ந்தாய் லீலை
பல புரிந்தாய்
அதன் பொருள் உணர்ந்தாய் அதுவாகி நின்ற
நிரஞ்சனமே!

சத்தே வடிவாகி நின்று சத்தை என்னில்
உணர்த்தி
சத்தின் சித்தை விளக்கிய ஆனந்தமே!

சத்தின் சித்தே எல்லா மாகி இருக்கின்ற
எல்லையில்லா பெருமிதமே
உனை எங்கும் காணும் அற்புதமே! ஆனந்தமே!

இரு சொல் பொறிகள் அடக்கி சமாதி நெறிகள்
உணர்த்தி
உயர் பேறடைய வைக்கும் உயிர்த்துவமே!

அன்பே வடிவான வேத தத்துவமே!
குரு உருவே பரவசமே! பரமானந்தமே!
எனை ஆட் கொள்ளவே வந்த பரிபூரணமே!

6. ஞானம் ஒன்றே பரம சுகம் தருமே - ஆத்ம
ஞானம் ஒன்றே பரம சுகம் தருமே!

பொல்லாத மயக்கும் மாயை தன்னில் தன்
மதியை இழந்து
அறியாமையினால் பாலகராய் வீணாய் திரியும்
அன்பரே கேளீர்!
ஞானம் ஒன்றே பரம சுகம் தருமே!

இருவினை பயனதை நலமென நம்பியே
மேலும் பல கருமஞ் செய்து
பிறவி பல அனுபவித்தும் ஆசை மயக்கம்
தீரவிலையோ?

தூலசரீ ரபிமானங் கொண்ட நாம ரூப
மயக்கத்தில் நாளும்
பலதேகம் கண்முன் வீழ்ந்தும் கூட ஆசை
மயக்கம் தீரவிலையோ?

பின்னிப்பிணைத் தழுத்தும் இருமை நிறைந்த
பெரும் புதைகுழியாம்
பந்தபாசத்தில் வீழ்ந்தடி பட்டும் ஆசை மயக்கம்
தீரவிலையோ?

தேகத்தை நம்பி சாதனை என்றே மூச்சை
யடக்கி சாகசம் செய்து
தன்னை தானே வருத்தி கொள்ளும் ஆசை
மயக்கம் தீரவிலையோ?

மனதின் வழி செலும் புத்தியானதோர்
தடுமாற்றமே தந்திடுமே
பலஎதிர் பார்ப்பும் பொய்த்துப் போயும் ஆசை
மக்கம் தீரவிலையோ?

இன்பம் தன்னை பொருளில் தேடியதை காக்க
போராடி வதங்கி
மீண்டும் எதையோ தேடி ஓட ஆசை மயக்கம்
தீரவிலையோ?

நிலையான சுகமென்றிருக்க நிலையில்லா
சுகத்தை விரும்பி
பாழும் விதி வழி மதி செல்ல அனுமதித்தல்
முறையோ அம்மா?

ஆசையொழிக்க மூலத்தை பற்றி அறிவால்
மெய்ப் பொருளை உணர
உணரும் அக்கணமே உன்னை பெறுவாயே
ஆதலினால்
ஞானம் ஒன்றே பரம சுகம் தருமே!

உனதியல்பே அன்பே யதனால் வேறாய் எதை
தேடி ஓட
எங்கும் எதுவும் இல்லை என்றே நீயும்
உணர்ந்திட உதவும்
ஞானம் ஒன்றே பரம சுகம் தருமே!

நீ தேடும் ஆனந்தம் உன் ரூபமே அதனால்
சச்சிதானந்த பரம் பொருள் நீயே என உனை நீ
உணர
ஞானம் ஒன்றே பரம சுகம் தருமே!

7. ஆதார நிலையே எங்கும் உறைந்தாயே என்னே அற்புதமே
நீயே யாவுமான ஞானத்தை உணர்த்திடவே
எங்கும் உன் ஆடலை காணும் ஞானவடிவாய் வந்தமர்ந்தாய்

நீயே உனக்கானதை படைத்து மகிழ்ந்தாய்
நீயே நீ வேண்டியதை அனுபவித்தும் மகிழ்ந்தாய்
மறந்தால்நினை வூட்டநீயே சாத்திரங்கள் சமைத்தாய்
என்றும் உன் லீலைக ளெல்லாம் கற்பனைக் கடங்காதே

கற்றறிந்த பண்டிதர்க்கும் எளிதில் புரிவதில்லை
வனந்தனில் தவம் செயும் ஞானியர்க்கும் தெரியவில்லை
வரசித்திகள் பல பெற்ற யோகியர்க்கும் கிடைப்பதில்லை
நீயேமன மிரங்கி வந்து உன்னை அளித்தால் பேறுண்டு

வேதங்கள் புனைந்தும் வேடங்கள் புனைந்தும்
மகிழ்ந்து விளையாடி அனுபவிக்கும் குறும்பே
அற்புதமே உந்தன் மயக்கு மாயலீலை தனிலே
நீயே மயங்குவது போல் நடிக்கும் மாயமென்னவோ?

காணும் இடமெல்லாம் நீயே நிறைந்திருந்தும்
உள்ளும் புறமுமாய் எங்கும் வியாபித்தும்
உன்னை காணவென்று உன்னை நீயே தேடி

ஏதேதோ செய்வது போல் நடிக்கும்
மாயமென்னவோ?

நீயே உன் மாயவலையில் சிக்கியே வீழ்ந்து
பின் புலம்பியழுது சிரிப்பதுபோல் சிரித்து
அகப்பட்ட கள்வனைப் போல் ஏங்குவது போல்
ஏங்கி
எதற்கோ எதிர்பார்த்து காத்திருக்கும்
மாயமென்னவோ?

உனக்கு நீயேகுருவாய் வந்துபதேசம் தரவே
தன்னையே தனக்குணர்த்த குருவடிவை
கொண்டனையே
குருவின் சீடனும் நீ சீடனின் குருவும் நீ
நீயே வந்துனக்கே போதிக்கும்
மாயமென்னவோ?

உன்னையுனக் குணர்த்திடவே பூஜ்யமா
வரச்செய்து
சத்தின் உயர் நிலையை உணர்த்திடவே செய்து
உனது வினோதத்தை நீயேகூறி மகிழ்ந்திடவே
நீயே உனை கண்டது போல் நடிக்கும்
மாயமென்னவோ?

அங்கிங் கென்றெண்ணாமல் எங்குமே நீயே
அதுயிது எனக்கூறும் யாவையும் நீயே
சிந்தனைக்கெட்டாத பரசுகம் நீயே
நீயே நானெனக் கூறி உன்னை நீயே
அறிந்தாயே!

8. காலன் வருங்கா லென்செய்வாய்?
வாழும் போதுன்னை யாரென் றறியாது
காலன் வருங்கா லென்செய்வாய்?

சத்தினுயர் நிலையறியாத போதந்திமக்
காலம் வருங்கா லென்செய்வாய்?
காலன் வருங்கா லென்செய்வாய்?

மானுடபிறவி யோர் வாய்ப்பென்ப தறியாது
பெருமை கொள்வதி லென்ன பயன்?
கலமோர் சாதனைக் கருவியென் றறியாமல்
கலத்தின் மீதாசை வைத்தென்ன பயன்?

வரமாய் பெற்ற கலத்தின் பயனறியாதாகி
காலன் வருங்கால் என் செய்வாய்?
சேர்த்த புலமையும் கலத்தைக் காத்திடுமோ
காலன் வருங்கால் என் செய்வாய்?

ஓயாதோடிச் சேர்த்த பொன்னும் பொருளும்
தானே
காலன் வருங்கால் பேரம் பேசிடுமோ?
சத்திய மறியா தாசை தனை பெருக்க
காலன் வருங்கா லுதவுமோ?

போதுமென் றறியாத மனத்தில் வசப்பட்டால்
காலன் வருங்கால் மகிழ்ந்திடுமோ?
பேராசை புயல் வீசி அமைதி யிழக்கு மனம்
காலன் வருங்கா லடங்குமோ?

காஞ்சனகாமினியு மாயத்தி னங்கமே
மயக்கு மாதுருவில் தான் நிற்குமே
பித்தங் கொண்டே யதில் மோகித்து வீழ்ந்தால்
காலன் வருங்கா லுதவுமோ?

பொல்லாதபிமானங் கொண்ட தேகமுந்தான்
நிலையில்லா உலகைத்தான் சாருமே
தீராத் துயரந்தரு மந்தபிமானந்தான்
காலன் வருங்கா லுதவுமோ?

ஊட்டமுள்ளவரை சேர்த்த பொருளுக்காக
ஈயெனமொய்க்கு முற்ற சுற்றமே
பிணியு மூப்புஞ் சேர்ந்துனை தளர செய்து
வீழ்த்த
காலன் வருங்கால் துணை வருவரோ?

ஹம்ஸோட்டத் தாலேதான் கலனுக்கோர்
பயனுண்டு
ஓட்டம் நின்றால் கலனுஞ் சவமே
கலனில் கொண்ட பற்று தீயாய் எரிந்திட
காலன் வருங்கா லென்செய்வாய்?

பொல்லாத மனதோ கேளிக்கை மோகத்தில்
இன்ப துன்பந் தேடி யல்லாடுமே
சத்தை விட்டு சித்தில் பற்றை வைத்தாயே
காலன் வருங்கா லென்செய்வாய்?

உற்றமுஞ் சுற்றமும் யாரென றியாத
விசித்திர மாயையில் வீழ்ந்தாயே
உன்னை அறியாத கலனுந் தான்பாழாகும்
காலன் வருங்கா லென்செய்வாய்?

உனதுடைமை மக்கள் யௌவன மனைத்தையும்
காலங் கணத்தில் சூறையாடிடுமே
மயக்குமாயைதனில் கர்வங் கொண்டே வீழ்ந்து
காலன் வருங்கா லென்செய்வாய்?

தேகந்தளர முடி. வெள்ளியாய் மின்ன
வாக்குங்குழறும் வயோதிகமே
முக்காலின் தேவையிலும் ஆசைதனை
கொண்டால்
காலன் வருங்கா லென்செய்வாய்?

பகலிறவு போலே காணுமுலகிலே
மாற்றந்தா னென்றென்றும் சாத்தியமே
காலமும் காட்சியும் மாறும் போது முந்தன்
ஆசைகாற்றை பிடித்தென்ன பயன்?

பொல்லாதாசை யென்னும் மாயப்பேயாமது
பிறவி தோறுமுடன் வருமே
பல தேகமெடுத்தே பலபிறவி கழிந்த பின்னும்
ஆசையை கொண்டு தானென்ன பயன்?

காலன் வருங்கா லென்செய்வாய்?
வாழும் போதுன்னை யாரென் றறியாது
காலன் வருங்கா லென்செய்வாய்?

சத்தினுயர் நிலையறியாத போதந்திமக்
காலம் வருங்கா லென்செய்வாய்?
காலன் வருங்கா லென்செய்வாய்?

9. சத்தேயுன் னியக்கத்துக் காதாரமா முன
தனைத்திற்கும் சாட்சியாம் ஞானப்பெண்ணே!
சாட்சியை யொத்தே பணிந்தே நடப்பவன்
அகத்தி லுலகாள்வான் ஞானப்பெண்ணே!

மாயவுலகிலே மயக்குந் தோற்றங்கண்டு
மயங்குவாருண்டு ஞானப்பெண்ணே!
மாறுமுலகிலே மாற்றத்தை விரும்பி
மாற்றுக்கா கேங்காதே ஞானப்பெண்ணே!

தானென்ற கர்வத்தில் மூவாசைக் கலைபவன்
பேருக்கு வாழ்கிறான் ஞானப்பெண்ணே!
மனப்பொறி யடக்க வழியறி யாதோர்க்கு
ஞானமோர் வேடமே ஞானப்பெண்ணே!

பவசாகரந் தன்னை கடக்குந் தோணியாம்
சான்றோருரை கேளடி ஞானப்பெண்ணே!
நல்லோருறவாலே பற்றதனை யொழித்து
உன்னை நீயறிவாய் ஞானப்பெண்ணே!

பக்குவ மென்பதோர் தத்துவமே யதை
காலம்புரிய வைக்கும் ஞானப்பெண்ணே!
கண்கெட்ட பின்னொளி காணத்துடிக்காமல்
காற்றுள்ள போதறிவாய் ஞானப்பெண்ணே!

தானதரும யாத்திரைவிரத யோக மெல்லாம்
சித்த சுத்திக்கு தான் ஞானப்பெண்ணே!
உன்னை யறியுமுயர் ஞானத்தை யறியாது
முக்திக்கோர் வழியில்லை ஞானப்பெண்ணே!

எதனை நீ அறிவாயோ அதுவாவே யாகிறாய்
சான்றோர் வாக்காமது ஞானப்பெண்ணே!
சத்தையறிந்தவன் சத்தாவாகிறான்
என்பதே சூட்சுமம் ஞானப்பெண்ணே!

நித்யாநித்ய விவேகஞ் சீரிய
வைராக்கியந் தருமடி ஞானப்பெண்ணே!
அதுவே ஆசைகளறவே யழித்து சித்தை
சத்தில் நிறுத்துமடி ஞானப்பெண்ணே!

உயர் சத்தில் நிலைபெற்ற சித்தை கொண்டா
லெங்குமெதிலு மானந்தமே ஞானப்பெண்ணே!
சித்தில் சத்தைவைத் திருசொல்லற நிற்பவன்
ஞானியாகிறான் ஞானப்பெண்ணே!

தன்னில்தானாய் நின்ற ஞானியிடத்திலே
காலமுங் கனியும் ஞானப்பெண்ணே!
உயரா னந்தநிலை உறையு மிடத்திலே
கர்மமும் பணியும் ஞானப்பெண்ணே!

சித்தில் சத்தை நிலையாக வைத்தவன்
பேரானந்தந் துய்க்கிறான் ஞானப்பெண்ணே
சத்தா மதிலே சத்தாகி நின்றவன் மன
பேதஞ் செயிக்கிறான் ஞானப்பெண்ணே!

சத்தின் லீலை புரிந்தவனே எல்லாஞ்
சத்தா யுணர்கிறான் ஞானப்பெண்ணே
தானே யனைத்துமே யென்பதா லிருமை
பயத்தை செயிக்கிறான் ஞானப்பெண்ணே!

மரணமிலா நிலை யெனுமுயர் நிலையில்
வாழும் போதே வாழ்வாய் ஞானப்பெண்ணே!
சத்தே சத்தியம் காண்பது தோற்றமென
சத்தி லொடுங்குவாய் ஞானப்பெண்ணே!

10. சுத்தப்ரம்மத்தின் உள்ளமே மாயையாய்
ஆதியில் வெளி வந்ததாம்
சுத்த சத்வத்தில் ஈஸ்வரனாயது
ஆத்மனாகியதாம்
அவித்தையினாலதை மறைக்குஞ் சக்தி
யாவரணமானதாம்
தோன்றுஞ்சக்தி மனதா யுலகஜன
கடவுளானதுவாம்

தோற்றமறைப்பெனும் இருமையின் மனமே
ஜீவனானதுவாம்
ஜீவனும் தன்னில் மயங்கியே சம்சார கடலில்
மூழ்கியதாம்
ஆசையென்னும் ஆணவக்கொடியைப் பிடித்து
தத்தளித்ததாம் தானீஸ்வரனெனுந் தன்நிலை
மறந்தே ஜீவனுமழுததாம்

ஆசையில் மயங்கிய ஜீவன் அனைத்தும் சத்திய
சுகமென்றான்
அதைப்பெருக்கிக் காத்துகொள்ள போராடுவது
நித்திய சுகமென்றான்
தேகம் விடுகையில் துக்கத்தினால் கொண்ட
பற்றினை சிந்தித்தான்
பற்றில் விட்டவன் பற்றில் திரும்ப தேகத்தை
எடுக்கின்றான்

உலகும் பொருளு முறவுமுனை தினம்
பக்குவப்படுத்த தான்
அனுகூலமனுபவம் கிடைத்திடும் வழியே
காணும் தோற்றந்தான்
மானிட தேகங்கொண்ட தனைத்தின் மீதும்
பற்றினை விட்டிடதான்
பற்றினை விட்டிட வழியே குருநாதன்
சரணங்கள் தான்

அனுபவிக்க வெனதரப் பட்டதெல்லாந் தர்மஞ்
செய்யத்தான்
மாறுமுலகே உனதென்றே யுரிமைபாராட்டா
திருக்கத்தான்
நானென தென்பதெல்லா மிந்ததேகமி ருக்கும்
வரையில்தான்
முக்திக் குதவும் சாதனமிந்த மானிட தேகந்தான்

உலகமுயிருடைமை யெல்லா மந்தகாலத்தின்
கைகளில் தான்
பஞ்சகோசா பிமானந் தானிருப்பதை மனதும்
உணரத்தான்
ஜபதபத்யான யோகபயிற்சியெல்லா சித்தமல
மழிக்கத்தான்
பேரின்ப மடைய தடையே சிற்றின்ப பற்றே
காரணந்தான்

முக்தியென்பது பிறப்பிறப்பற்றவன் நீயென்
றுணரத்தான்
தேகமனம் புத்தி சித்தமகங்கார மலங்க
ளொழிந்திடத்தான்

விடுபட்ட மனமே பூரண நிலையை உணரு
மென்பதால் தான்
முக்தி என்பது மனத்திற்கேயென்று நீயும்
உணரத்தான்

11. **அ**ன்பே வடிவா னற்புதந்தனில் நிற்பவன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

**ஆ**தாரநிலையை கண்டதி லொடுங்குபவன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

**இ**கபரசுகத்தை வைராக்கியமா செயித்தவன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

**ஈ**சுவர சங்கல்ப மாயெல்லாங் கொடுத்தவன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

**உ**ண்மை நிலையுணர்ந்தே சத்தில் திளைப்பவன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

**ஊ**மையாகி தன்னில் தானாய் நிற்பவன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

**எ**ல்லா பொருளிலும் சத்தை காண்பவன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

**ஏ**காந்த நித்திரையில் தூங்காமல் தூங்குபவன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

**ஐ**ம்பொறியடக்கியே சான்றோர் வழி நடப்பவன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

**ஒ**ப்புமைக் கெதுவுமே இல்லாதாய் காண்பவன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

**ஓ**ரறிவு முதலெல்லாந் தானாய்க் காண்பவன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

**ஔ**வியந்தன்னை வைராக்கியமா செயித்தவன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

**அஃ**தென்றாதார மையத்தி லொடுங்கியன்
அமைதியி லானந்தந் துய்க்கிறான்

12. மனமே அமைதியில் நிலைபெறுவா யதற்கு
உன்னை யாரென அறிந்து கொள்வாய்
மனதே நீதானே எல்லா மறிகிறாயே
எஜமானனெனவே பொறிகளை ஆள்கிறாயே
மனதே நீ அமைதியி லாழ்வாய் தாலேலோ
தாலேலோ தாலேலோ தாலோ

உன்னில் எழுமெண்ணங்கள் பிரம்மா
என்பதாகும்
எண்ணங்களை செயல்படுத்த விஷ்ணு
என்பதாகும்
எண்ணங்களை மறந்தொடுத்தால் மகேசுவரன்
ஆகும்

சிறிதுஞ் சளைக்காமலே ஓயாதுழைக்கிறாயே
மனதே நீ அமைதியி லாழ்வாய் தாலேலோ
தாலேலோ தாலேலோ தாலோ

உன்னிச்சைக்கா வென்றோர் கோட்டையை
கட்டினாயே
ஓட்டம் நடைபெறவே ஒன்பதோட்டை
பதித்தாயே
பூதமைந்துங் காவல் காக்க கோட்டையை
ஆள்கிறாயே
நீ சமைத்த கோட்டையழகில் நீ மயங்கி
வீழ்ந்தாயே
மனதே நீ அமைதியி லாழ்வாய் தாலேலோ
தாலேலோ தாலேலோ தாலோ

சித்தமுதிக்கு முன்னே கைகட்டி நிற்கிறாயே
அங்குமிங்க லைந்தலைந்துன் நிம்மதியை
இழந்தாயே
நிலையிலாத னைத்தின்மீதும் நம்பிக்கை
வைத்தாயே
ஐயோ அல்லற்று அழுது புலம்புகிறாயே
மனதே நீ அமைதியி லாழ்வாய் தாலேலோ
தாலேலோ தாலேலோ தாலோ

நீ கொண்ட கோட்டைப்பொருளும்
காணுமெல்லா வுறவுகளும்
நீ விரும்புமெல்லா ஆசைகளோ
டெண்ணங்களும்
உனையெழுப்பும் காற்றோட்டமும் தடுமாறும்
புத்தியும்
எதுவும் நிஜமில்லை நிஜமே இல்லை

மனதே நீ அமைதியி லாழ்வாய் தாலேலோ
தாலேலோ தாலேலோ தாலோ

எங்கிருந்து மனமே நீயும் வந்தாய்
யாருக்காக பணிசெய்ய கோட்டைக்குள் வந்தாய்
கோட்டையுதிக்குமுன்னே எதுவா யிருந்தாய்
என்றெல்லாஞ் சிந்திக்க ஏனோ மறுக்கிறாய்
மனதே நீ அமைதியி லாழ்வாய் தாலேலோ
தாலேலோ தாலேலோ தாலோ

சிந்திக்க தனிமையோர் வாய்ப்பதுவே
சான்றோ ரறிவுரை கேட்பதும் நன்றே
அநித்யமறிய விவேகங் கொள்வது நன்றே
உனையறிய முழுமையான வைராக்யம்
கொள்வாயே
மனதே நீ அமைதியி லாழ்வாய் தாலேலோ
தாலேலோ தாலேலோ தாலோ

நீயே மூலத்தை ஆத்மனென் றறிகிறாயே
அதுவே அனைத்திற்கு மாதாரமா யறிந்தாயே
மூலமறிந்த பின்னறிய வேறா யேதுமில்லையே
இருசொல்லற மூலத்தில் ஒடுங்கி கொள்வாயே
மனதே நீ அமைதியி லாழ்வாய் தாலேலோ
தாலேலோ தாலேலோ தாலோ

மூலத்தை பற்றியதால் நீதானே பரப்ரம்மமே
நீ காணு மனைத்தும் ப்ரம்மத்தின் வடிவமே
இருமைகளொழித்து உன்னில் நீ நிறைந்தாயே
எண்ணமேது மில்லாத உயர்பேறில் நின்றாயே
மனதே நீ அமைதியி லாழ்வாய் தாலேலோ
தாலேலோ தாலேலோ தாலோ

மனமே அமைதியில் ஆனந்தம் கொள்கிறாய்
பேரானந்தமெங்கும் பரவ காண்கிறாய்
அன்பின் பேரொளியால் அனைத்தையு
மாள்கிறாய்
சச்சிதானந்தனாய் எங்கு மொளிர்கிறாய்
மனதே நீ அமைதியி லாழ்வாய் தாலேலோ
தாலேலோ தாலேலோ தாலோ

13. மனதே றக்கை கட்டிக் கொண்டு பறந்தே நீ
இரையை தேடி எங்கு மலையாதே

நீ போகு மிடயாதோ எவரோ எனதறியாதங்கே
சென்று மாட்டிக் கொள்ளாதே

முற்பிறவி தனில் ஓயாதோடி சேர்த்ததெல்லாம்
எங்கே போச்சுதென்றே நீயு மறிவாயோ?

வீணாய் நம்பி அலைந்தே தேடிவைத்த
தெல்லாம்
பாழாய் போச்சுதென்றே நீயு மறிவாயோ?

எல்லாமென்னால் தானேயென்ற போலி கர்வங்
கொண்டே
படமெடுத்து நீயு மாடாதே

வீணாய் டம்பங் கொண்ட கயவர்க் கடிமையாகி
அவர்க்கு மகுடி நீயும் ஊதாதே

மனதே நீ விரும்பு மிடமெல்லாஞ்
செல்வதாராலே
என சிந்திகாது காலங் கழிக்காதே

காணுஞ் சூரியசந்திரன் தெரிவதாராலோ
அவராலே
உதிக்கிறாய் என்பதை மறவாதே

அந்த யாரென்ப தறியவே மனிததேகங்
கொண்டா
யென்பதை நினைக்க நீ மறவாதே

வீணாசையில் சிக்கி மனிததேகம் பாழாய் போக
ஒருநாளு மனுமதியாதே

யாரென்ப தறிவது உன்னை யறிவதாகும்
என்பதை நீயு மறிவாயே

உன்னை யறிந்தாலெல்லா மறிவதாகும்
என்பதை நீயு மென்று மறவாதே

யெரென்றிய மாயத்தோற்றத்தில்
மயங்காதுண்மை
சத்குருவை நாட மறவாதே

அவர்கூறும் மொழிகளை காற்றில் கரைக்காமல்
நடைமுறைப் படுத்த நீயும் மறவாதே

விசாரமொன்றே ஞானவைராக்கிய
சாதனமென்றே

அறிந்துன்னை தெளிவாக்க தயங்காதே
விவேகத்தோடு வைராக்கியம் கொண்டேயதில்
நிலையா யிருக்க சிறிதுஞ் சலிக்காதே

மனமே நீ மூலமென் றறிவ துந்தன்
முக்திக்கான வழி என அறிவாயே

மூலத்தி லொடுங்கி உன்னை கரைத்தால்
அதுமயமாகி கலந்தே நிற்பாயே

14. வீணாசை கொண்டே புலம்பும் மானிடனே
உன்னையறிய தாமசம் ஏனோ

ஈயெரும்பு முதலாய் மானிடரா யெடுத்த பிறவி
கணக்கி லடங்கவில்லை

ஊனுறக்கமைதி வேண்டி சலிக்காது ழைத்தும்
கவலை ஓயவில்லை

கண்ணீரும் விசும்பலும் மிகுந்து பட்டும் இந்த
தேகாபிமானம் விடுவதில்லை

குற்றங் குறைகூறி பழகியே வந்தாலும் எதுவும்
பிடிக்காமல் போகவில்லை

வீணாசை கொண்டே புலம்பும் மானிடனே
உன்னையறிய தாமசம் ஏனோ

உடலென் றொன்றிற்கு காப்பென எண்ணியே
மண்ணிலே கோட்டை கட்டினானே

மாயமண்ணாசையால் போலிகர்வங்
கொண்டேயதை சொந்தமென கொண்டாடினானே

மூவிரண்டடி மண்ணு மெஞ்சாதென் றறிந்தும்
சொத்தில் பற்றை வைத்தானே

முன்னவ ரெல்லாம் கைவீசி போனதை
பார்த்தும் மண்ணில் மயங்கி நின்றானே

வீணாசை கொண்டே புலம்பும் மானிடனே
உன்னையறிய தாமசம் ஏனோ

மாயத்தினோ ரங்கம் காஞ்சன காமினியும்
மயக்கும் பெண்ணுருவில் நின்றதே

மாயபெண்ணாசை யெனும் மாயக்குகையாமதில்
சுகமென வீழ்வது புதைகுழியே

மாயப் பேய்க்கு மாண்டவர் சிறுமையறிந்தும்
மதிகெட்டே உன்மத்த னானானே

காலம் காலனை கொண்டுவரும் நேரம் காஞ்சன
காமினியும் போவதெங்கே

வீணாசை கொண்டே புலம்பும் மானிடனே
உன்னையறிய தாமசம் ஏனோ

நாளுமோர் கற்பனை கோட்டை கட்டியதில்
தரும ராசனாகி என்ன பயன்

ஊச லாட்டத்தில் தன்னை மறந்தே வீணாய்
காலம் போக்கி என்ன பயன்

காணுமனைத்தும் உண்மையென நம்பி
ஆசைதனை வளர்த்து ஏது பயன்

வாழும் காலத்தில் தன்னையறியாது ஆசையில்
மடிவதில் யாது பயன்

வீணாசை கொண்டே புலம்பும் மானிடனே
உன்னையறிய தாமசம் ஏனோ

நொந்துடல் தளர்ந்து நோயில் நடுங்க தன்னை
சிந்தித்து யாது பயன்

ஜீவ நாடிகள் நைந்திடும் வேளையிலும்
கொண்ட ஆசைகளை நினைத்து யாது பயன்

கோழை கபம் வந்து நெஞ்சையடைக்க
உற்றசுற்றத்தால் யாது பயன்

நாவும் குழறி விக்கி பேச்சுமடங்க கொண்ட
மூவாசையால் யாது பயன்

வீணாசை கொண்டே புலம்பும் மானிடனே
உன்னையறிய தாமசம் ஏனோ

பொறியும் கரணமும் ஓட்டமு மடங்க காலனை
கண்டழுது யாது பயன்

ஆடி அடங்கியே ஆவி பிரியும் வேளை
தன்னை நொந்தழுது யாது பயன்

எனதென்றவை யெல்லாம் இல்லை யென்றாகும்
அவ்வேளை கண்ணீர் சிந்தி யாது பயன்

எமதூதரும் வளைத்து பிடிக்கையிலே
உற்றபெற்ற மற்றவரால் ஏது பயன்

வீணாசை கொண்டே புலம்பும் மானிடனே
உன்னையறிய தாமசம் ஏனோ

**ஓம் தத் சத்!**

